உ

பரமபதி துணை.

பார்ஸி

# வள்ளியம்மைசரித்திரம்.

இஃது

திருமருதூர் என்னும் நைனார்கோவில் வில்வக்கண்ணாசாரியர்

குமாரன்

டி. எம். பி. மூக்கவேளார் கம்பெனி

அயன் ராஜபார்ட்

சபாரஞ்சித

டி. வி. சத்திவேலாசாரியாரவர்கள்

இயற்றி,

மதுரை வடக்காவணிமூலவீதி, புத்தக வியாபாரம்,

இ. ராமசாமிக் கோனாரால்,

மதுரை

எக்ஸெல்ஸியர் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1924. 

பூவணம் N. K. S.

வேலுச்சாமிக் கவிராய ரவர்கள்,

இயற்றிய

# சண்முகானந்த பக்திரஸ கீர்த்தனம்.

நண்பர்களே! கவனியுங்கள்! கவனியுங்கள்!!

பாவாணர் போற்றும் பூவணம் வேலுச்சாமிக் கவிராயரவர்களால் கால நாகரிகத்திற் கேற்றவாறு பற்பல அற்புத வர்ணமெட்டுகளா லியற்றிய இக்கீர்த்தனப் பிரபந்தத்துள்

பரங்கிரி வேலவன்மீது பாடியுள்ள பஞ்சாமிர்த,பாலாபிஷேகப் பாடல் படிக்குந் தோறும் பஞ்சாமிர்தச் சுவைபோலவே இருக்கும்.

கார்த்திகேயக் கந்தன் மீதுள்ள தோத்திரப் பாடல்கள் படிக்கப்படிக் கச் சீர்த்தியாயும், மனப்பூர்த்தியாயு மிருக்கும்.

கழுகாசலக் குமரன்மீதும் திருக்கழுக் குன்ற முருகன் மீதும் பாடி யுள்ள ஓரடிச்சந்தப் பாடல்கள் உள்ளமகிழ்ச்சியை உடனே உண்டாக்கும்.

"தொனிக் கிணங்கு சங்கீதம், பாலஷண்முகனே, இருப்பார்வதி மகனே" என்ற வண்ணச் சந்தக் கீதங்கள் கேட்குந்தோறும் எண்ணுந் தோறும் கிளர்ச்சியை உண்டாக்கும்.

"செந்தாழக்தேன்" என்ற பாடலும் அதன் சந்தத்தொனியும் தாளத் தொனியும் அக்கோர் சீலப் பதவியைத் தரும்.

இன்னும் அடங்கியுள்ள மற்ற அருமையான பாடல்கள் படிப்பவர்க் கும், கேட்பவர்க்கும் சதா ஆனந்தத்தை உண்டாக்குமென்பதில் ஐயமில்லை.

விலை அணா—4

---

முத்தமிழ் க்ஷேத்ரம் பழனி வித்வான் மகா-ா-ா-ஸ்ரீ

K. பக்கிரியாபிள்ளை யவர்களியற்றிய,

புதிய பாடல்களாகிய

# தோத்திரக் கீர்த்தனப்பாமாலை.

அத்தன்மலரடி சித்தமகிழ்வுடன் நித்தந்துதிசெயும் உத்தம மித்திரர்களே!

கவனியுங்கள்! கவனியுங்கள்!!

பழனியம்பதியுறை ஸ்ரீதண்டபாணிப் பெருமான் சந்நிதியில் அவனருளாலே அவன்றாள் வணங்கி அசரீரி அடி எடுத்துக்கொடுக்கப் பரவசங் கொண்டு, பாமாரிபொழிந்த பக்தசிகாமணியாகிய நம் பக்கிரியாபிள்ளை யவர்கள் பாடிய இத் தோத்திரக்கீர்த்தனங்கள் பகவானைத் தோத்திரம் புரிவார்க்கு நேத்திரம் போன்றது. இதில் அடங்கியுள்ள செவிக்கின்பந் தரும் சிறந்த மெட்டுகளும், வாக்குக்கினிக்கும் வண்ணச்சந்தங்களும், உள்ளம் மகிழ்விக்கும் ஓரடிப்பதங்களும் படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பரமானந்தத்தை உண்டுபண்ணும். இதில் முருகபிரானை மயில்மீது எழுந் தருளுமாறு இயற்றியுள்ள இங்கிலீஷ் பாடல் மனதிற்கு உருக்கத்தையும், உற்சாகத்தையும் உண்டாக்கும். சொற்பக் காப்பிகளே தயாரிலுள்ளன.

விலை அணா 0—5—0.



உ

பரமபதி துணை.

# பார்வதி வள்ளியம்மை சரித்திரம்.



## காப்பு வெண்பா.

வெள்ளியம்பலன்கரத்தில் ,மின்னுகலைமாணிகர்
துள்ளிடுமாகன்வருக்குத் தோன்றிடுசேய்-வள்ளிதனைச்
செந்திவளர் கந்தன் திருமணந்த காதைசொலத்
தொந்திவயிற் றோன்தாள் துணை.

இராகம்-இந்துஸ்தான்- தோடி-தாளம்-ரூபகம்.

## பல்லவி.

கஜமுகவர தா கிரிராஜபுத்ரிசுதா
திருவருள் தா (க)

## அநுபல்லவி.

தசமுடியோனை வாலிமராவெனும்
தருவின மதை யொருநொடிவதை
ஹரிமருகனே இருதயமுறு (க)

## சரணம்.

திசைமுகனைச் சிறை செய்தவீரன்
செந்தில்பதியிலமர்ந்த ஒய்யாரன்
வசைநாளும்வான வர்க்குச்செய்சூரன்
மடியநெடிய வடிவுடையவேல்
பிடிமுருகன்முன் படிமிசைவரு (க)

இசைதமிழ்மலரா லுனைத்தேடி
இந்துஸ்தான்தோடி யாற்பாடி
பசனைசெய்தேன் பணிந்துகொண்டாடி
பாலகன்சத்தி வேலனைநத்தி
மூலனேமுத்தி மூஷிகாவெத்தி (க)

சரஸ்பதி துதி.

பியாரிதோரி பியாரிஷான் என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-தோடி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

சாரதாகல்யாணியே தாமரைமலர்வாணியே
தாரணிபுகழ்ஞானி நாரதர்பிர்மக்ஞானி
ஞானாதினந்தொழும் வேணியே
தாமரைமலர்வாணியே (தா)

ஆரணப்பொருளாவியே அகிலசிருஷ்டிதன்தேவியே
அஞ்சலியுடன்தானே குஞ்சிதபதமானே
தஞ்சமென்றேன் பதம்பேணியே
தாமரைமலர்வாணியே (தா)

பக்தியோடுயான்பாடினேன் பாதஞ்சிரமேற்சூடினேன்
முத்திதருமெந்தாயே சித்தமோடருள்வாயே
சத்திவேலன்துதி தேவியே
தாமரைமலர்வாணியே (தா)

## 1-வது சீன் நம்பிராஜன் தர்பார்.

குற்றமற்றவெற்றிமாலை என்றமெட்டு.

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

தீரரைவெற்றிகொள் வீரவுதார
சிங்கம் சிங்கம் சிங்கம்
திக்கிலுள்ளோர் பக்தியுள்ளோர்
சென்னிவணங்கவே ஞானமுரைக்குந்
துங்கன் துங்கன் துங்கன்
நம்பியெனுமிந்த அம்புவியாளும்
ராஜன் ராஜன் ராஜன்
நம்பினவர் துன்பமற
நாதன்முருகேசன் பாதம்பணிநன்
நேசன் நேசன் நேசன்

## முருகத்தம்பிரான் வணக்கம்.

### முன்னூல் கலித்துறை.

விழிக்குத்துணை திருமென் மலர்ப்பாதங்கண்மெய்ம்மைகுன்றா
மொழிக்குத்துணைமுருகாவெனு நாமங்கண்முன்புசெய்த
பழிக்குத்துணையவன் பன்னிருதோளும்பயந்ததனி
வழிக்குத்துணையவன்வேலுஞ் செங்கோலும்மயூரமுமே.

## நம்பிராஜன் பாலர்கள் வருதல்.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

சிங்காரவேல்முருகா சேவைதாவையா
மங்காதசெல்வந்தா மாகுகாமெய்யா(சிங்)
மால்மருகனேயிந்த மலேதனையாமே
நூல்முறையரசாள நவல்கிர்பையாமே(சிங்)
தத்தியென்றுடும்நடே சன்னருள்பாலா
சத்திவேலன்துதிக்குந் தமிழ்மறைமூலா(சிங்)

பால:—பிதாமகாராஜ்! பாலர்கள் வந்தனம்.
நம்பி:—கல்யாண் பாலர்காள் வாருங்கள்.

## தேச விசாரணை.

மாறியாடு மதுரேசனே என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

மாரிபெய்து முப்போகமே கண்
மாய்குளம் வயல்களுந் தடாகமே
வாண்மையாய்வே ளாண்மைநீடும்
மார்க்கமுரைத்திடுவீர் தீர்க்கமாய்
மடங்கள் சத்திர மடங்களுஞ்செழித்
தடங்களும்மிகத் திடங்கள்பெற்றதா(மா)

அடா என் கண்மணிகாள்! நமதுநாட்டில் மாதமும்மாரி பெய்து, வேளாண்மைகளெல்லாஞ் செழிப்பாய்விளைந்து, அதனுல் நடக்குந் தர்மங்களெல்லாம் ஒழுங்காய் நடந்து வருகின்றதா?

பால:—பிதா! மாதம்மூன்று மழைக்குக்குறைவில்லாமல் வருசித்து எவ்விதக்குறைவுமில்லாமல் நடந்தேறி வருகிறது பிரபூ!

நம்ஃ—சேயர்காள்! நமது சண்முகக்கடவுளை மறவாது போற்றி வாழ்வைப்பெற்று வருகின்றாரா?

புத்:—பிதா! ஒவ்வொருவரும் அதிகாலையிலெழுந்து ஸ்நானம் செய்து, நித்தியகடனை முடித்துக் குலதெய்வத்தையும பூஜித்து யாதொரு குறைவின்றி வாழ்ந்து வருகின்றார்கள்.

நம்பி:—புதல்வர்காள்! மிகவுங்குதூகல மடைந்தேன். நல்லது. யாரோ ஆசாரத்தின்கண் வந்திருப்பதாகத் தெரியவருகிறது. விசாரித்து வாருங்கள்.

புத்:—அவ்விதமே பார்த்து வருகிறோம்.

அடே நீ யார்?

குற:—நாங்க மலையிலிருந்து வந்துச்சு கிலங்கு வெட்டியிந்த பல்லத்துலே ஒரு குஞ்சு கிடந்துச்சு.

அடே குஞ்சு வென்று லென்னடா?

அய்யா அதுதா பொங்குஞ்சு அது மகாராஜாவுக்கு சொல்லன்னு வண்ட.

சரி வருகின்றோம் செல்லுங்கள்.

பிதா! ஏதோ குறவர்கள் கிழங்கு வெட்டிய கிடங்கில் ஒரு பெண்மகவு இருப்பதாகவும், வந்து பார்க்கும் படியாகவும் சொல்லுகிறார்கள். நேரில் போய்ப் பார்த்தால் தான் தெரியும்.

நம்:—மைந்தர்களே! ஆனால் சீக்கிரம் உங்கள் மாதாவை அழைத்து வாருங்கள். நாம் எல்லாம் சேர்ந்து செல்வோம்.

மோகி:-நாதா! நமஸ்கரிக்கின்றேன். தாங்கள் அழைத்த காரணம் மைந்தர்களால் தெரிந்தேன். செல்வோம் வாருங்கள்.

## நம்பிராஜன் பிள்ளையைக்கண்டு வர்ணித்தல்.

கண்மணி! நமது முன்னோர்கள்செய்த நற்கருமவசமோ, அல்லது நாம்புரிந்த தவப்பயனோ, நம் குலதெய்வமாகிய சுப்பிரமணியக்கடவுளர் நம்பால் நன்மதி கூர்ந்து நற்புதல்வியை அளித்தனர். பெண்மகவற்ற பெரும்பாவி யெனும் வசைநீங்கிற்று. நாம்இனிநமதகத்திற் கெடுத்துச்சென்று, நம்குறையைத் தீர்த்துக்கொள்வோம்.

நம்பிராஜன் அக்குழந்தை வள்ளிக்கிழங்கு வெட்டியபள்ளத்தில் வள்ளிக்கொடியால் காப்பாற்றப்பட்டதால் வள்ளியெனும் நாமம் வகித்து, வளர்த்து வருங்கால் அப்பெண் சகலகலையுமுணர்ந்து பக்குவதிசை அடைந்து கன்னியா மாடத்தில் இருந்தனள்.

## தினைப்புனத்திற்கு வள்ளியை அனுப்பும் பாகம்.

நம்:—பாலர்களே! நமது அருமைப்புதல்வியை அழைத்து வருவீர்கள். பிதா! அவ்விதமே.

மை:—கல்யாண் தங்கையே! தந்தை உன்னை அழைத்துவரக் கூறினர் வருவாயாக.

வள்:-அண்ணமார்களே! பிதாவாக்குக்கெதிர் வாக்குளதோ? இதோ வருகிறேன் வாருங்கள்.

### வள்ளி பிரவேசம்.

விருத்தம்.

குயில்போன்மொழிந்து சிவனோடிருந்து
கோதையுமை
பயில்சேயாய்வந்து கிரிமீதமர்ந்து
படவசுரர்
அயிலாலெறிந்து உயர்தேவர் வாழ்வை
அன்றுதந்தாய்
மயிலேறிவந்து குமராகலந்து
மகிழுவையே.

இராகம்-தோடி-ரூபகம்.

பல்லவி.

கந்தனேவந்துகா எனைக்
கந்தனேவந்துகா நான்
காலைமாலையந்தியெந்த வேளையுந்துதித்திடவே (கந்)

அநுபல்லவி.

செந்தில்நற்குன்றத் தேயுறைதேசா
சிற்சபைநடேசன் சேயேஉல்லாசா

தந்திக்கிளே யாய்வந் தாய்நகர்வாசா
தருணமிதுவே கருணைபுரிய
அருணகிரியி னுரைமலரணி (கந்)

சந்ததிபோற்றுந் தயாநிதியே
சற்குருவெங்கள் குலத்தையாள்வாயே
பைந்தொடியாட்குன்பொற் பாதந்தந்தாயே
பக்தியோடுனே நித்தியசீலனே
நத்தியேபணி சத்திவேலனைக் (கந்)

## வள்ளி நம்பிராஜனைப் பணிதல்.

ஆயமுஜேதர்தேஜி என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

சீதமலர்ப்பாதமதைச் சேவைசெய்தே னுவனுடன்சேயே
நற் சிந்தைகொண்டு யான் பணிந்துநின்று
மனு நீதமுறை தந்தையன்பாயேநற்
சிந்தைகொண்டு யான்பணிந்துநின்று (சீ)

பிதா! நமஸ்கரிக்கின்றேன். சேயை அழைத்த விபரமென்ன?

நம்:-எனதருந்தவப் புத்திரியே! மாசிறப்புப்பொருந்திய நமது சோலைக்கருகில் விதைத்திருக்கிற தினைக்கதிர் விளைவாகுஞ் சமயமாயிருக்கிறது. நீஅங்குசென்று நம் ஜாதிமுறைப்படி கையில்கவண் வைத்துப் பக்ஷிஜாதிகள் கதிரைத்தின்னாது காத்துவா கண்மணி!

## வள்ளி தரு.

அலைசேர்கடல் மீதினிலே என்ற வர்ணமெட்டு.

இராகம்-கமாஸ்-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

அறியேனிதுநாள்வரை யுந்தனியே
அடர்கானக மீதினிலே
ஆழிமழையெப்படி யாயுறைவேனறை
வீர்மனமொப்பிடிலோ (அ)

வரியேமிகு சோலைகள் சூழிடமே
மங்கைதனி யங்குறப்ப யங்கரமி லங்கருகை
தங்கவரு சிங்கமுத லெங்குமுண்டுமே (அ)

பிதா ! தனியாக வனத்திலிருக்கத் தகுமா? மேலுஞ் சோலை சூழ்ந்தவனமென்றுஞ் சொல்லுகிறீர். என்றாலும் பிதாவாக்கியத்தைமறுக்காது செல்கிறேன். ——மைக்கும் போதெல்லாம் தமையன்மாரும், தாங்களும் வந்து சேரவேண்டும் தந்தையே!

நம்பி—நல்லதம்மா! நீயுந்தனியாகச் செல்லவேண்டாம். உனக்கு வேண்டிய துணைத் தோழியர்களையெல்லா மழைத்துச்செல்வாய்.

வள்—நல்லது பிதா! சென்றுவருகிறேன். தோழிகாள்! பிதாகூறிய வண்ணம் தினைப்புனத்தை நாடிச்செல்வோம் வாருங்கள்.

தோழி:—சரி வாருங்கள்.

## வள்ளி வனத்தைப் பார்த்து வர்ணித்தல்.

மதனபிஷேகனுந்தமாஸன் என்ற வர்ணமெட்டு.

இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

சோங்கானகானகத்தை நாடி
துடர்ந்து வாடி (சோ)

அநுபல்லவி.

மாங்கனி மாதுளை வளர்தருவினமே
வரிசைவரிசைநறு மலர்களின்வனமே (சோ)

சரணம்.

பாங்கிரோஜாசிவந்திபாரு பவளமல்லி
ஓங்கிவளர்பன்னீரென்சீரு உரைக்கொண்ணுத
தேங்குதண்ணீர்த்தடாகஞ்சேரு சீக்கிரம்நேரு
கோங்குதருக்கள்தேவதாரு குளிர்ந்தசெழுஞ்
செந்தாமரைமல்லியுந் தேவபக்ஷிகளுஞ் சிறந்து திகைத்துநின்று
வந்தார்மனிதரென்றறிந்தே செலுகின்றதேபறந்து
வங்காவுங்கொக்கும்

தந்தாரமோடுமச்சமே தேடியுன்பதினுல்மறந்து நிற்கத்தெரிந்து
மந்தாரமேகமிது சந்தோஷமாகவழி யறிந்துபுகுவோம்தெளிந்து
வருமினிச் சுகம் வனவாசமே நாமோ
வகையுடன் பெறத்தான் வலியவந் தோமோ
தருவனமி தற்கிணை கூறிட லாமோ
சத்திவேலன்சொற்பதந்துதித்தினிவீண் போமோ (சோ)

மஹா மசடிகாள்! என்னடி இந்தவனத்தினுடைய பெருமை யைப பார்த்தீர்களா? மந்தாரை, மல்லிகை, பிச்சி, இருவாட்சி, செண்பகம், ரோஜா, பன்னீர்முதலிய பூந்தருக்களுங் காடை கவுதாரி, மயில், குயில், செம்போத்து, கிளி, மாடப்புறு வினங்களின் கூட்டமும் இளந்தென்றலும் இதனருகே என்தமையன்மார்கள் அமைத்த தினைப்புனமும் பரணும் என்ன விச்சித்திரமாயிருக் கிறது! வாருங்கள் பரணேறிக் காவல்புரிவோம்.

## 2-வது ஸீன் பரண் தினைப்புனம்.

[வள்ளி தினைப்புனம் காத்தல்.]

இராகம்-காம்போதி-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

ஆலோலம் ஆலோலம் ஆலோலம் ஆலோலம்
ஆலோலம் ஆலோலம் ஆலோலம் ஆலோலம்

காட்டகத்தேயுலவு கருங்குருவிதன்னினமே
கூட்டமிகுராஜாளி கோகிலமே அன்றில்களா சோ சோ சோ

பாட்டம்பாட்டமாகவந்து பறக்குங்குயிலினமே
தேட்டமுடன்புகுந்து தினையைவிணுக்கினீரே சோ சோ சோ

செந்நெல்தணைக்கெடுத்த செண்பகமேதாராக்களே
கன்னல்ரசம்பாடுகுயில் காடைகவுதாரிகளே சோ சோ சோ

அன்னமேபுறுவினங்காள் அடர்கருங்காகங்களே
சென்னிதனிற்கொண்டையுள சித்ரக்கிளியினமே சோ சோ சோ

சேடிகாள்! இந்தப்பக்ஷி ஜாதிகளெல்லாம் நாம் எவ்விதம் கவண்கொண்டெறிந்தாலும் செல்கிறதில்லையே என்னசெய்யலாம்?

## நாரதர் பிரவேசம்.

இ-ம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

பயப்படாதேநெஞ்சமே ராமனைத்துதிசெய்தால்
சுகப்படுவாய்தினமே நமன்கையி
லகப்படுமுனமே (பய)

ஜெயத்திலுமுந்தன்புத்தி நயத்திலுஞ்சிரமோடிரு
தயத்திலும்வந் துகந்து
வியப்பைத்தருவானவன் (பய)

நான் திரிலோகங்களுஞ் சென்று, ஹரிகரப் பிரமாதிகளைத் தெரிசித்து, அழகாபுரிக்குச்சென்று இன்று ஒருகலகமும் கிடைக்கவில்லை. ஆதலால் பூலோகத்தினிடமாக இந்தமலைச் சார்பினில் வந்தேன். இங்கு என்ன அதிசயமென்று கவனிப்போம்.

வள்ளியைக்கண்டு கலித்துறை

வெல்லாத் தவசு புரியு முனிகள் விருப்பமுறுஞ்
சொல்லா ளிவளின்மொழி யோசைக் கேயிந்தச் சோலைக்குயி
லெல்லாங் குவிந்துபின் னேகாது கிற்கு திவளைத் தமிழ்ச்
சொல்லான டேசன் பணிவேலுக் கேமணஞ் சூட்டுவேனே.

[நாரதனைக்கண்ட வள்ளி வந்தனஞ்செய்கிறுள்.]

பகாரியாலாதேக்கோ என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

மாமுனியோரே போற்றி மாதேற்றினேனே (மா)
தேமலர்ப்பொற் பாதந்தன்னைச் சேவித்தேனே நானே
தினைப்புனந்தனித்துவந்த சீமானே வள்ளி
சிந்திப்பேனே வள்ளி சிந்திப்பேனே
தினங்கமழ்மலர் வனங்களில்விலங்
கினங்களின்பய மனங்கொளாது (மா)

தவநாதா! வந்தனம். தங்கள் வரவுநல் வரவாகுக! தாங்கள் யார்? அடியாளுக் குரைசெய்யவேண்டும் பிரபூ!

நா:—அம்மா! நான் திரிலோக சஞ்சாரியாகிய நாரதன்,

## வள்ளிக்கும் நாரதனுக்கும் தர்க்கம்.

ஆறுமாமுகனே என்ற வர்ணமெட்டு.

இராகம்-கமாஸ்-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

நீ யாரம்மாதனியே நீயாரம்மா தனியே-இந்த
ஆரணியத்தில்வந்த காரணமென்சொல்வையே (ஆ)

வ:—தவ-நாரதமுனியே தவ-நாரதமுனியே
நம்பிராஜன் வளர்த்திடு கொம்பனையானறிவையே (நா)

நா:- இங்கு-கோரவிலங்கினங்கள் இங்கு-கோரவிலங்கினங்கள்
மிகுஆரவாரமுறு வதுதெரிந்திருந்தும் (கோ)

வ:—மனத்-தீரமிகுதியுண்டு மனத்-தீரமிகுதியுண்டு
கொடுஞ் சிங்கமும்பயப்படு மெங்கள்குலத்தைக்கண்டு (ம)

நா:- ஒரு-காரணங்தெரியேன் ஒரு காரணங்தெரியேன் எந்தக்
காளையர்க்குன்னை மண மாலையிட்டாரோமுன்னே (ஒரு)

வ:—வந்த-நீரோமாதவரே வந்த நீரோமாதவரே-அன்
னீதமேனெடுத்து ஓதுகிறீர்தவரே (வந்)

ஐயா! தவமுனிவரா யிருந்தும் இவ்வித அன்னீதமொழிகள் பேசுவதழகல்ல. சென்றுவிடுவீர்.

நா:—அம்மா! நான் வினவிய விஷயங்களைப் பற்றிக் கோபம் வேண்டாம். இவ்வளவு லெக்ஷணத்தோடு இவ்வனத்தில் தனியே இருப்பதால் மணமுடிந்ததா வென்று கேட்டேன். வேறு கெட்ட எண்ணம் என்மனதிலில்லை.

இராகம்-இந்துஸ்தான்-தோடி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

நா- திங்கள்தங்குமுக மங்கையே உனக்குச்சுப
மங்களகாரியமென்ன முடிந்ததுவோ
வ:—கங்கை கொன்றையணி சங்கரன்போலிருந்தென்ன
தங்கைதாயில்லாத மொழி சாற்றுகிறீர்
நா:- அங்கஜனுக்கிணையோ ராடவனிருக்கார்
வ:—பங்கமடைகுவீர் பிதாமனம்பொறுக்கார்

நா:- பாவையேநீமன மாவல்மிகக்கொள்வையே
வ:—பாவியேனோநீ உனது ஆவிபோக்குறாய் செல்வையே

நா:—நான் சொல்லப்புகும் ஆடவனை உனக்கு இன்னவரென்று தெரிந்தால், நீயே ஆவல் கொள்ளுவாயென்று நினைக்கிறேன். நீ அப்படிச்செய்யலாம். என்சொல்லைக் கேட்பையோ?

இராகம்-காம்போதி-தாளம்-ஆதி.

பல்லவி.

போம்போம் நாரதமுனியே உமக்கிப்புத்தி
புகட்டினதாருமூன்று ஜகத்திற்குமேசனியே(போ)

அநுபல்லவி.

வீம்பேஉனக்குப்பாடம் விளம்புவதென்விசேடம்
வித்தைபலபேசிப்பேசி கத்துகுறீர்கையைவீசி(போ)

சரணம்.

சாம்பசிவன்போலிருந்துஞ் சாற்றியமொழிதனையே
சகித்திருந்தேன்குறவர் குலத்திலுற்றுந்
தாம்பிதாவுஞ்சோதரருந் தான்வணங்குந்தெய்வமான
சத்திவேலனுக்கோளனைப் பத்தினியாக்குவேனென்றீர்(போ)

அடடா! இதென்ன அன்யாயம்? எங்கள் குலகுருவுந் தெய்வமுமான சத்திவேலவர்க்கா மணமுடிப்பேனென்றீர்? போய்விடும் வேண்டாம் கஷ்டமடைவீர்.

நா:—அப்படியானால் அந்தச்சத்தி வடிவேலுக்கே உன்னை மணந்து வாழும்படி செய்யவில்லையென்றால், என்பெயர் 'நாரதன்' என்று எண்ணவேண்டாம்? சென்றுவருவேன் கழுகாசலம்.

பலே சபாஷிந்த டோராவைப்போல் என்ற மெட்டு.

இராகம்-பார்ஸி-தாளம்-ஏகம்.

வள்ளி கண்ணிகள்

18092

சற்றுமண அச்சமில்லாமலே பக்ஷிகள்கூடியே
இக்ஷணமே நாடியே தினைதனைப்
பக்ஷணமாய்ச் சேடியே
உண்ணவி னைந்திங்கே நண்ணுதடி அதை

விண்ணேற்ற என்மனம் என்னுதடி
ஒகோ அதோபார் வேகமென்னசீர்
ஓங்கியே கவண்தாங்கியே ஒதுங்குதெந்தன்பாங்கியே
உஜார் உஜார் உஜார்

நார:—நான் திரிலோகமுஞ் சென்று இன்று தினம் ஒருகலகமுங் கிடைக்கவில்லையென்றிருந்தேன். இன்றுஇந்த மணக்கலகங்கிடைத்தது. உடனே கழுகாசலக்கடவுள் முன்சென்று, நடந்த விர்த்தாந்தத்தைக்கூறி, இந்தவள்ளியினுடைய கர்வத்தையடக்கி மணமுடிக்கும்படி செய்வோம்.

## 3-வது சீன் கழுகாசலம்.

### சுப்பிரமணியர் பிரவேசம்.

இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

திருப்புகழ்ச்சந்தம்.

கண்ணிகள்.

மாதுபார்வதிபாகா நமோ நமோ
ஓதுமூவர்சொல் மோகா நமோ நமோ
மாழைசேர் கனிவாயா நமோ நமோ ஜகதீசா

மாசிலாமணியேவா நமோ நமோ
காசிராமேஸ்வராகா நமோ நமோ
மாறியாடியபாதா நமோ நமோ திரிசூலா

போதுநீர்பிறைவாசா நமோ நமோ
சாதுசேகரதேசா நமோ நமோ
பூணுமான்மழுபாகா நமோ நமோ சடையோகா

திருக்கயிலையில் உமாமகேஸ்வரர், திருக்கொலுவில் தேவகூட்டங்கள், ரிஷிகோஷ்டங்கள், சூழ்ந்திருக்க எனது மாதாவான பர்வதா புத்திரியார் கண்கள் களிப்படையச் சென்றும், இங்குள்ள எனது பக்தகோஷ்டியர்க்கு ஏதாவது நேரிடுமென்ற எண்ணத்தோடு, என்பதியாகிய இக்கழுகாசலத்தி லமர்ந்தேன். பிரதிதினமும் நம்சேவை பெற வரும் நாரதரை யெதிர்பார்க்கிறேன்.

## நாரதர் பிரவேசம்.

பாரும்பரங்குன்றேனே என்ற வர்ணமெட்டு.

இராகம்-கமாசு-தாளம்-ஏகம்.

கண்ணிகள்

சத்தி-வேலாயுதாசரணம் சத்தி-வேலாயுதாசரணம்
சத்தி வேலாயுதாசரணம்
வீர சூர தீர னேவடி (வே)
விரிசிறகொடு திரிமயிலினி லுறுகுருபரசரஹணபவ
வித்தகனே பித்தனெனும் நித்தபர அத்தனருள் (வே)

ஏ கழுகாசலா! நாரதன் நமஸ்காரம்.

சுப்:—திரிலோக சஞ்சாரியே! வரவைப்பற்றிப் பேரானந்தம்.

மார்க்கத்திற்கண்ட கனிதனக்குற்ற என்றவர்ணமெட்டு.

இராகம்-கானடா-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

சுப்:-எங்கெங்குசென்றுநீ ரிங்குவந்தீர்முன் னியம்புவீர்மாமுனியே
நா:-கங்கையமுனைசீரங்கஞ் சென்றேரிடங் கண்டுவந்தேன்கனியே
சுப்:-கண்டகனியோவிருக்ஷத்திருப்பதின் காரணமென்முனியே
நா:-அண்டர்களுங்கண்டுதொண்டுசெய்வாரதி யற்புதமக்கனியே
சுப்:-வானமளாவியிருக்குந்தருவினில் வாய்ந்ததுகிட்டிடுமோ
நா:-தீனதயாளாவிரண்டுகொம்பைப் பிடித்திடிலகப்படுமே
சுப்:-பறப்பனவாகியபக்ஷிகள்சென்று பசிக்கிரையாக்கிடுமே
நா:சிறப்பைநினைந்தவைசென்றாலேஅக்கனிதீர்த்துயிர்போக்கிடுமே
சுப்:-என்றுமிலாதவதிசயஞ்சொன்னீர் எழில்முகம்வாயுமுண்டோ
நா:-கண்டுநிகரும்மொழிபுகலும் எந்தன்காயனம்வீணுமுண்டோ

நாரதபிர்மமே! நீருரைத்தது மிக்கவதியமான கனியென்றீர். முடிவில்காதற்கனியாகமுடித்துவிின்றீர். அஃதெங்கேயிருக்கிறது?

நார:—அடியேனே நாவாலுரைக்கத் தகாதென்று ஓவியத்தால் வரைந்து வந்தேன். இதோபாருங்கள். சிற்றாரிலுள்ள தினைப்புனத்திற்கண்டு என்னாற் கூடியவரை வரைந்து கொண்டுவந்தேன்.

## சுப்பிரமணியர் படத்தைப்பார்த்து வர்ணித்தல்.

காப்பாயையா அனுமானே என்ற வர்ணமெட்டு.

இராகம்-கல்யாணி-தாளம்-ஆதி.

பல்லவி.

நின்-வாய்திறந்தொருவச - னத்தைச்சொல்லுவாய்
மதியைநிகர்த்த வதனிதாளமுறை (வாய்)

அநுபல்லவி.

தேயுமிடையுடைய தேனேமகிழ்வடைய
சித்தமிகுத்துநீயித்தருணத்தில் விழித்தொருவார்த்தையை
உத்தமியேபுகல் (வாய்)

சரணம்.

காதலியுன்னைச்சதுர்வேத னமைத்தவநின்
காரணந்தெரியாமல் வேறெண்ணமாய்நினைத்துப்
பூதலமீதிற்சிறை போட்டேன்வருமம்வைத்துப்
புத்தமுதத்தை நிகர்த்திடுசற்குண
பத்தினியேதனி முத்தமெனக்கிடு (வா)

ஆகா என்ன லக்ஷணம்? என்னரூபம்? என்னசிங்காரம்? கண்மணி! எனக்கென்று உன்னைப்படைத்த பிர்மனைச் சிறையிட்டேன் ஓர்வித காரணத்தால். இனி உன்னால் நான் அவனை எனக்கு வேண்டிய இஷ்டனாய்நினைத்தேன்.

சுப்:—நாரதப்பிர்மமே! உன் கண்ணிற்கண்ட அருமைக் கனியை யான் பார்த்து வரவேண்டும். இதோ சென்று வருகிறேன்.

நார:--பிரபுவே! தாங்கள்சென்று வரும்வரை யானிங்கேயே இருப்பேன் சென்று வாருங்கள்.

## வள்ளியைக்கண்டு வேலன் வர்ணித்தல்.

ஓதிருநெல்வூர்வளரோய்யாரா என்ற மெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாகு-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

தங்கநிறமேனியுளமாது இவ
ளங்கமெலாம் வீசுதேஜவ்வாது ஓர்க
ளங்கமிலாதே யுதித்தசாது பூவி

லரிவையர்களி லரியதிருவி னயனம்விழியோ டமைதலேமிக
அற்புதத்தினற்புதமேயாகும் படைபிர்
மத்திறனும் புத்தியுள்ளோனும்(தங்)

ஹா! ஹா! நாரதர் கொடுத்த படத்திற்கும், இந்தக்கன்னிகை யிற்கு மிடத்திற்கும், பிர்மனுடைய கைத்திடத்திற்கும் ஒருவந்தனஞ் செய்யலாம். ஆனல் என்ன காரணத்தைக்கொண்டு, இவளுடன் பேசுகிறது! நாம் மானைத்துரத்தி வந்ததாகவும், அதுதவறி இங்குவந்ததே என்றும் கொண்ட வேடத்திற்கு நேராகவே போய்ப் பேசுவோம்.

## 4—வது ஸீன் தினைப்புனம் வேடரூபம்.

இராகம்-கமாஸ்-தாளம்-ஆதி.

சுப்பிரமணியர் பல்லவி.

எழில்மானென் றுவந்ததெங்கே இவ்
வனமீதினிலென் கணைமேவி எழில்(மா)

அரையடிக் கண்ணிகள். இந்துஸ்தான்-ஆதி.

வ.—மானெந்தமானது ஏனிங்கேவந்தது
வே:- நானெய்தவேகத்தால் தானிங்கேவந்தது
வ:—வந்தமானுக்குற்ற வகையடையாளமென்னசொல்லுவாய்
வே:-அந்தமானுக்கந்தமா யமைந்தகொம்பிரண்டுண்டும்
வ:—அதைஅறியே னறியேன்
வே:-அதைஅறைவாய் விரைவாய் எழில்(மா)

என்கைக்கணைக்குத் தப்பி! இங்கேவந்த மானைக்கண்டிருந் தாற் சொல்லுவாய். நான் கணைதொடுக்க, உனையடுத்து ஒடிவந்த மான். என்காதற்கேற்றமான், வனமான், கனமான், தனமான், நல்ல இளமான், என் துணைமான், வந்ததெங்கே?

வள்ளி கலித்துறை.

கான்தேடி வேட்டை புரியவந் தாய்கன வேடுவனே
மான்தேடி யென்னிடம் வந்துநின் றேகிவா தாடுகிறாய்
நான்தேடி மானைப்பி டிப்பதில் லையதை நங்கையர்கள்
ஏன்தேடு வார்கள் அறியாது வார்த்தை யியம்பிடாதே

ஏ வேடுவா! நீ காட்டில் வேட்டைசெய்ய வந்தவன் என்னிடத்தில்வந்து, மான்வந்ததென்று வாதிப்பது தகுதியல்ல. நான் மான்களைத் தேடிப் பிடிப்பது வழக்கமில்லை. மேலும் பெண்கள் அதையேன் தேடிடுவார்? வேணுமென்று கருதும்விஷயத்தில் எத்தனையோ மான்கள் கொண்டுவந்து கொடுக்கத் தயாராயிருக்கிறார்கள் என் தமையன்மார்கள். அறியாமையான வார்த்தைகளைப் பாஷித்துக் கஷ்டமடையாதே சென்றுவிடு.

மலடிவயற்று மகன்போலே என்ற வர்ணமெட்டு.

இராகம்-ஆனந்தபைரவி-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

வே:-தினைபுனங்காத்திடு மடமயிலே நான்
உனைக்கண்டிங்கடைந்தே னடிகுயிலே மிரு
களைப்புடனேடிவோர் மானிதிலேவரத் தெரிவாயோ

வ:—துள்ளியமானிங்குவரக்காணேன் மாது
வள்ளிமானது விபரமுந்தோணேன் நீ
சொல்லியமானுக்கென்ன அடையாளம் அதுபுகல்வாயே

வே:-தார்புயமீதிலேகொம்புண்டு அதைக்
கூர்வடிவேலெய்ய மனங்கொண்டு அதின்
பார்வைநடையழகுதனைக்கண்டு வந்தேன் களைப்புண்டு

வ:—கானகந்தனில் வாழும்வனவேடா புள்ளி
மானுக்குமார்பிற் கொம்புதகுமோடா உந்தன்
ஈனப்புத்தியறிந்தேன் குடிகேடா தடிமூழமூடா

ஹே! வேடனே! உந்தன் மானிங்குவரவேயில்லை. மானிலும் மார்பிற் கொம்புள்ளதென்று கூறி, என்னையே கூர்மையோடுபார்க்கிறாய். இதெங்காவதுண்டா! மார்பிற் கொம்புடையமான்? உன் கெடுமதியைத் தெரிந்தேன். மரியாதையொடு சென்றுவிடுவாய். இல்லையேல் கஷ்டம் விளையும் உனக்கு.

வே:—கண்மணி! உன்பரண்மீதுற்றமானை வெகுகாதலோடு துரத்திவந்தேனே. இப்படி மேமறைத்துவைத்துக் கொண்டு, என்னை மயங்கவிடுகிறையே! இது ஞாயமா? உன்னைக்கண்ட நான் அதிக மையல் மீறினேன். தயவுசெய்து மானைத்தான் தராவிடினும்; உன் னிதழ்த்தேனையாவது தரக்கூடாதா? மயிலே!

வள்ளி விருத்தம்.

வேடுவனே உனக்கென்ன கெடுகாலம் விளைந்ததினல்
அறிவு கெட்டு விரைந்துவந்து
ஓடுமானென்று வரக்கண்டையோ வென்
றுரைத்தனையே அடையாளமுலகோர்மெச்ச
கோடுநெஞ்சினிடத்திரண்டு உடையதென்றாய்
கூர்மையுடனெனைப்பார்த்துக் குடியன்போலச்
சாடுதென்றாய்ப் பின்மதனல் தவித்தெனென்றாய்
தரணிபரென் தந்தைவில்லுக் கிரையாவாயே.

இராகம்-கமாசு-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

மனத்தினைத்துளைக்கு மாரன் என்ற வர்ணமெட்டு.

வே:-நெஞ்சுரத்திருந்துமாரன் பஞ்சபாணம்மெய்கிறுன்
வ:—வஞ்சியாலுயிரிழக்க வாதையுன்னைச்செய்கிறுன்
வே:-அஞ்சுகமொழிகூறுவாய்
வ:-ஆசையாளிடம் சேருவாய்
வே:-அழகுளஉனதிளமுகமதைப்பழகிடவிந்த
உலகிலமைந்தவன்யானே
வ:—வஞ்சகாஉனக்குக்கேடு வந்தநாசகாலமா
வே:-செஞ்சிலேமதன்எனக்கித்தீங்குசெய்யலாகுமா
வ:—சீச்சீநீயென்னபேசுறுய்
வே:-தேவியேயெனையேனேசுறுய்
வ:—சேயன்சத்திவேல் நேயங்கொள்ளு
முபாயஞ்சொல்கிறேன் பேயனேயிதைத்தெரிவாயே

ஏ வேடா! வீணுவிற் கெட்டுப்போகாதே! சென்றுவிடு. என்னை இன்னுளென்றறியாமற் கூறவொண்ணு வசனங்களைக்கூறிக் கஷ்டமடையாதே. மரியாதையாய்ப் போய்விடு.

வே:—கூறவொண்ணு வசனங்களைக் கூறினே னென்றாய்! நீ சேரவோண்ணுவசனுங்களைக் கூறினதால், நான் கூறவொண்ணு வசனங்களைக் கூறினேன் என்று வைத்துக்கொள்ளேன்,

(875-41)
NL4
181092

வடிவேலனே என்ற மெட்டு.

இராகம்-கமாஸ்-தாளம்-ரூபகம்.

வள்ளி கண்ணிகள்.

அடா பாதகா பெண்ணின் பாவம் வேண்டாங்காதகா
உயிர் பறிகொடுத்தே னறியாது
வெறிபிடித்தென்முன் திரிகிறாய்கொடும் (பா)

ஆதவனைப்பனி வெல்லுமோ சொல்லடா
அவ்விதமாயென்னை எண்ணியே செல்லடா
மாதெனைத்தீண்டல்நன் மார்க்கமீதல்லடா
மனமதிலிந்த நினைவதை உந்தன்
கனவிலுமெந்தத் தினமற கொடும் (பா)

அடே! உன்னுயிர் தப்பிக்கவேண்டுமானால், இந்த எண்ணத்தையே விட்டுவிட வேண்டாம்.

ஆயலோட்டும் பெண்ணே என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஆதி.

வேடன்.

ஆசையானேன்மானே நான் ஆசையானேன்மானே
அன்னமே உனையேகண்டு மன்னவஉன்நினைவு கொண்டேன்
கன்னல்வில்லோனைச்செயிக்கக் கன்னியேதயைசெய்யடி (ஆ)

வள்ளி.

வேசைல்லயானே போ வேசையல்லயானே
வீணனேஉனதுஜட பிராணனைவிடநினைந்து
எனைனைத்துரத்திவந்து மானமில்லாதே அலைந்தாய்(வே)

வள்ளி.

தாமதமேன்போடா இனித் தாமதமேன்போடா
சத்திவேலனைத்தியானித் தித்தரையிலேயிருக்கும்
பத்தினியென்றெனையுல கத்தினிற்சொல்வாரகலத் (தா)

வே:—கண்மணி! இம்சை சகிக்கவில்லை அந்தப்பாதக மாரப்பயல் எய்கிற பஞ்சபாணத்தால், தயவுசெய்து ஒரு முத்தமாவது கொடு.

வள்ளி கலித்துறை

எல்லாந் தெரிந்துபழகினன்போலென் னிடத்தினின்று
சொல்லாத சொல்லிடுந் துஷ்டா உனது துயரமிங்கே
செல்லாது தில்லைநடேசன் சுதன்சத்தி வேல்செயலை
வெல்லாது பூவி லிதையறி வாய்வன வேடுவனே.

காருங்கந்தா கடவுளர்க்கு மைந்தா என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-சுருட்டி-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

தேடிவந்தேன் தெரிசனையே
தந்தேன் வனத்தில்வாழுஞ்
செந்தேனிதுசமய மே நீயே
ஜோடியிருவரே பதம்பாடி உருகவே
ஆனந்தங்கொண் டாடி வருகவே
உனைத் துதிபுரிகுவேன் நிதிபலவளித்
ததிவிரைவோ டென்பதியேவாடி (தே)

நாடிவருவையோ தேடிமுத்தந்தருவையோ
மதன்பதம் பாடிப்புரிவையோ
நறுமலரணைதனில் உலகம்புகழும்
மகிபன்சத்திவேல் புகல்செந்தமிழ்க்குத் (தே)

நிற்கநிற்கச் சோக்குதெந்தன் மனந்தானே என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-சுருட்டி-தாளம்-ஏகம்.

கண்ணிகள்.

முக்கனிரசத்தினொடு சர்க்கரைதேனே
மூன்றினுமமைந்தவிதழ் முத்தந்தாமானே (மு)

வள்ளி.

இக்கணமென்பக்கமதில் நிற்கலாமோடா
ஏந்திழையென் பாவந்தொடராது போமோடா (இ)

வேடன்.

பக்குவத்திலேசிறந்த பங்கயத்தேனே
பாவமதையாவலெதிர் பார்க்குமோமானே (ப)

வள்ளி

வெட்கமதுசற்றுமில்லா வேடுவாபோடா சத்தி
வேலன்சொன்ன நூலறியாதேன்மதிகேடா (வெ)

அடே வேடுவா! நான் என்னசொன்னாலும் தடுத்துக் கெட்ட வசனத்தைகளையே பாசிக்கிறாய்! இதோ என் தமையன் மார்களை யழைப்பேன். அண்ணா! அண்ணா! அண்ணா!

## 5-வது வஸீன் வனம்.

### நம்பிராஜன் வேட்டையாடல்.

இராகம்-கமாசு-தாளம்-ரூபகம்.

கண்ணிகள்.

வாரும்வேடரே சுற்றி வாரும்வேடரே
இந்த-வனமதில்நாம் க்ஷணமதி
னினமதையே வென்றுவர (வா)
யாருங்கண்டஞ்சிடும் யானைசிங்கம்புலி
அங்கமதுரு வங்கெடவுயர்
செங்கரமதி லங்குவாளொடு (வா)
கூளிகளுண்ணநீர்த் தூளியதுநண்ணக்
குத்தியதனைச் சித்திரவதை
இத்ததிசெயச் சத்திவேலொடு (வா)

அடா என்மைந்தர்காள்! நாம்வனவிலங்கினங்களை யெல்லாம் சங்கரித்துவிட்டோ மல்லவா?

அடே இதென்னடா! வள்ளி அபாயசத்தங் கொடுக்கிறது போல் கேட்கிறதே? என்ன சங்கதி கவனியுங்கள்!

பால:— ஆம்பிதா வருவீர்கள் செல்லுவோம்.

என் தங்காய்! இங்கென்ன நடந்தது? இதேது இந்தவேங்கை மரம்? இதை வெட்டிடுங்கள் புதிதாயிருக்கிறதே?

வள்:-அண்ணா! இதையேன் வெட்டவேண்டும்? எவ்வளவோகுளிர்ச்சியும் அழகும் பொருந்தி யிருக்கிறதே! வேண்டாம் மிருகங்கள் சத்தம் ஜாஸ்தி கேட்டது. அதற்காக அழைத்தேன். நீங்கள்வரவும் போய்விட்டது. வாருங்கள் பரணுக்குச் செல்லுவோம்.

நம்:—ஆம்! நம் வேட்டையிற் கலவரப்பட்டமிருகங்கள் சத்தம் போட்டு ஓடியிருக்கலாம். வாருங்கள் செல்லுவோம்.

சுப்—நாமிவ்வுருவமாற்றிக் கிழவடிவங்கொண்டு, நம்பிராஜனை அடைந்து இவ்வள்ளியிடம் அவனைக்கொண்டே வந்துசேருவோம்.

## 6—வது ஸீன் தினைப்புனம்.

### சுப்பிரமணியர் கிழவுருவம்.

கிழவன் வருதல் ஆனந்தக்களிப்பு.

பரம்பொருளின் பாதமேகதியானேன்
சிரங்குனிந்தேதாழ் கிழவனாகப்போனேன்
கரங்குவித்துக்கான் தலையிலலைந்தேன்
கந்தமாமலர் பந்தியாயுறு
செந்தில்மேவிடு கந்தநாதனே (ப)

ஹர, ஹர! வேலாயுதா, வேலாயுதா!

நம்:—பாலர்காள்! இங்கே யாரோ ஒருபெரியவர் வருகிறாரே! விசாரிப்போம். ஐயா! தாங்கள்யார்! தவசியைப்போலிருக்கிறீரே? வந்த விபரமென்ன? எங்கிருந்து எங்குபோகிறீர்?

கிழ:—அப்பா! யானிருப்பது வெகுதூரம். யாத்திரைக்கு இப்படியே வருகிறேன்· வழியுந்தெரியவில்லை. பசியு மிகுந்துவிட்டது. பொழுதும் போய்விட்டது. என்னசெய்யலாம்?

நம்:—ஆகா அப்படியா! நீர் இந்த வனத்தில்வந்ததே தப்பிதம். இங்கேவாரும். அம்மாவள்ளி! இந்தப்பெரியவரை உனக்குத் துணையாக வைத்துக்கொண்டு, நீ புசிப்பதை அவருக்குங் கொடுத்துப் பாதுகாத்துவா. நாங்கள் சென்று வருகிறோம்.

வள்:—பிதா! தங்கள் கட்டளைப்படியே செய்கிறேன். பெரியவரே! வாரும். தாத்தா! வாருங்கள். இப்படி அமருங்கள்.

கிழ:—வள்ளி!எங்கே நிற்கின்றாய்,கையைக்கொடு வருகிறேன்.

வள்:—இதோ கையைப்பிடித்து மெதுவாய் வாருங்கள். பிதா! தாங்கள் சென்று வாருங்கள்.

நம்:—சரி! சென்று வருகிறோம்.

## கிழவன் வள்ளியைப்பார்த்துச் சொல்லுதல்.

சேமமுற்ற கழுகாசலேசனே என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக் அளதாளம்-சாப்பு.

கண்ணிகள்.

காணும்நடுங்குதே மேனுமொடுங்குதே
கண்மணி குலநன்மணி அடிபெண்மணி - உன்னைக்
கண்டவுடனே களைமிகவாகுதே
காதலி எனை ஆதரி

வள்ளி.

கோலஞ்சிறந்த கிழப்பரதேசியே
கும்பிட்டேன் எனதன்பிட்டேன் கண்ணில்தென்பட்டேன்
அன்பு-கொண்டு நற்பாதமே தொண்டுசெய்துபணி
கொள்ளுவேன் வினை தள்ளுவேன்

கிழவன்.

பாவிபசிப்பிணி மேவிமயங்குறேன்
பாங்கியே மனதேங்கியே களைப்போங்கியே-நின்
பாதந்துணைபசிக் கேதும்தருவாயே
பாவையே நல்ல சேவையே

வள்ளி.

இத்தினைமீதென்ன பத்திசோதித்திட
இச்சையோ விதுபிச்சையோ பெரும்லெச்சையோ-உமை
ஈன்றசத்திவேலைப் போன்றபெரியோருக்
கில்லையே பசித் தொல்லையே

கிழ:—அடி வள்ளி! பசியோ மிகுந்துவிட்டது. கண்தெரிய வில்லை. உன்னைக் கண்டவுடன்ரிரம்பக்களைப்பாய் வருகுது. பிச்சை போட மனமில்லையா?

வள்:—தாத்தா! என்ன பசியதிகமாகி விட்டதா? அடி தாதி காள்! கொஞ்சந்தேனுந் தினைமாவும் பிசைந்து கொண்டு வாருங் கள் தாத்தா! சாப்பிடுங்கள்.

கிழ:—அடிவள்ளி! அடிவள்ளி! இதென்ன மோசஞ்செய்தாய்! நாவை உள்ளே சுருட்டி இழுக்குதே! கொல்லத் துணிந்து விட் டையா? துணிந்து விட்டையா? அடிபாதகி! அடிபாதகி!

வள்:—தாத்தா! என்ன தாகமாயிருக்கிறதா? இதோ மடுவி லிறங்கித்தண்ணீர் சாப்பிட்டு வாருங்கள்.

இராகம்-கானடா-தாளம்-ஆதி.

கிழவன் கண்ணிகள்.

ஏண்டி வள்ளியுனக்கு இந்தமடுவில் — என்னசெய்தேண்டிபாவி தள்ளிவிட்டாயே (ஏ)

தாண்டியேறிவரவோர் தண்ணீர்க்குள் தள்ளி — சக்தியில்லாதவென்னைத் விட்டாய்சதிகாரி (ஏ)

வள்:—இதென்னடி சங்கடம்! தாத்தா! இதோ இந்தக்கொம்பைத் தங்களிடம் நீட்டுகிறேன். அதைப்பிடித்துக்கொண்டு ஏறிவாரும்.

கிழ:—கொம்பைக் குனிந்துகொடடி. எட்டவில்லையே! அப்பாட மேடேற்றினையா? உனக்குச்சோசியஞ் சொல்கிறேன் கேள்.

வள்:—சரி சொல்லும்.

## கிழவன் வள்ளிக்குச் சோதிடஞ் சொல்லுதல்.

ஆனந்தக்களிப்பு மெட்டு.

ஆறுதலையானவனே கணவன் நீ
ராறுகரமாய்விளங்குமன்பனே துணைவன்
கூறியமாகோழி கைக்கொள் யூகன் அவன்
குமரனும் கிழவனல்ல சமரச விசாகன் (ஆ)

தேரூருமலை சுற்றித் திரிவோன் அவனைத்
திருமணஞ்செய்திடிலோ ஜென்மசாபல்யந்தருவோன்
பாரவனுக்காறுவீ டெல்லை இந்தப்
பரதேசிசோதிடம் பலிக்காததில்லை (ஆ)

வள்ளி! உனக்குக் கணவனாகிறவனுக்கு ஆறுதலையுள்ளவாம், ஊருசுற்றித்திரிபவனும், அவனைக் கல்யாணஞ் செய்தால், உனக்கு ஜென்மசாபல்யம் உண்டம்மா.

வள்:—தாத்தா! சும்மா இருக்க முடியவில்லையா?

கிழ:—வனத்தில் மிருகங்கள் இருக்குமே பயப்படமாட்டையா?

வள்:—அதையெல்லாம் பிடித்து விளையாடுவோம்.

கிழ:—ஆனையைக் கூப்பிடவா?

வள:—தாத்தா! சொல்லாதிங்கோ சொல்லாதிங்கோள்.

கிழ:—சரி சரி சரி.

ஆகரோகி என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-தோடி-ரூபகம்.

கண்ணிகள்.

வேழரூபமாகவருவாய் சகோதரா
பேழைவயிற்றோனே பெண்முன்னுகவேதீரா
தாழவே துதித்தேன் பெருச்சாளி வாகனு
மாழைவாய்மல்லைபையாள் மணாளமோகனு (வே)

[ஆனையைக்கண்ட வள்ளி பயப்படுகிறாள்.]

கிழ:—வள்ளி! வள்ளி! கல்யாணம் பண்ணிக் கொள்வையா?

வள்:—தாத்தா ஆகட்டும். தாத்தா ஆகட்டும். ஆகட்டும். இது போகட்டும். இதுபோகட்டும். இதுபோகட்டும்.

யானை போனவுடன் வள்ளி சொல் தரு.

சல்லாபக்காரி உல்லாசவீரீ என்றமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-பியாக்-தாளம்-ஆதி.

கண்ணிகள்.

மீசைநரைத்த கிழவா உனக்கின்னும்
ஆசையுமாதர்மேல் வேணுமோகாண்
பாசமிகுத்தஉனக்கினி மேஷிந்தப்
பண்டாரவேடமு மேனுக்கோவீண் (மீ)

தாசரதியென்று பேருமென்ன உந்தன்
தாடிசடைமுடியின் சீருமென்ன முழு
மோசமனத்தினில் வைத்துக்கொண்டேயாண்டி
வேசம்போட்டிங்கே மிரட்டவந்தாய் (மீ)

மீசை நரைத்தபின்பு ஆசையைப்பாரேன்! உன் ஆசையிலே உப்புவைத்துச்சுட! உனக்குப் பெண்டாட்டி தேடுதோ?

கிழவன் ஷெமெட்டு.

ஏனோளனைக்கேலி பண்ணுகிறாயடி
ஆனைவருகுதே அந்தோபாரு அந்தோபாரு அ-அ (ஏ)

[வள்ளி தாத்தா போகச் சொல்லுங்களென்று, கட்டிப் பிடித்துக் கலியாணஞ்செய்து கொள்வேனென்று உண்மைசொல்லவும், நேரே காட்சிகொடுத்து, மணம்புரிந்து வந்தநம்பிராஜனை மக்களுடன் சங்கரித்து, வள்ளிவேண்டுதலுக்காய் மோட்சங்கொடுத்துக் கழுகாசலஞ் சென்றவுடன் வள்ளியைக்கண்டு தெய்வானை.]

பிரபூ! நமஸ்காரம். இதெங்கே! போனவிடத்தில் சிங்காரத்துடனழைத்து வருகின்றீரே? தாங்கள் வரலாம். அந்தம்மாள் வெளியே நிற்கட்டும். பேஷ் நன்றாயிருக்கிறது வாழ்க்கை.

வள்:—கண்ணாளா! ஸ்வாமி! இவள்யார்? என்னை வெளிநிற்க வேண்டுமென்று கூறுகின்றவள்? நீஎன்னடி கேட்கிறது? நீவெளியேபோ.

## வள்ளி தெய்வானை சக்களத்திப் போராட்டம்.

படிதிடுக்கிட மயில் நடத்திடும் என்ற வர்ணமெட்டு.

இராகம்-இந்துஸ்தான்-காபி-தாளம்-ஆதி.

அரையடிக் கண்ணிகள்.

வள்:-அடிசிறுக்கியிப் படிமினுக்கிடா
தடிநீயப்புறம் போடி இந்தப்
படிசிரித்திடும் லேடி (அடி)

தெய்:-நடிநடித்தென்முன் துடிதுடித்திடில்
நடுவீடுள்வைப்பே னோடி அதை
விடுவனக்குள்நா னோடி (ந)

வள்:-லச்சைகெட்டென்முன்பேச லாகுமோடி

தெய்:-அச்சமற்றிங்கேண்டிவந் தாய்குடிகேடி

வள்:-வெளியேறடிபுருஷன் பாரடிபோயெங்கும்
சீரழித்திடுவேனடி இந்தப்
பாரில்சததிவேல் தெர்ற்பாடி (அடி)

தெய்:-ஏண்டி! இன்றுவந்தவளுக்கு இவ்வளவு தைரியந்தந்ததாரடி? இந்த அலைப்புக்கும் குலுக்குக்குமஞ்சி உன்னை நடுமனையில் வைப்பேனென்று எண்ணினையா? வெளியேறிவிடு சீக்கிரம்.

சுப்:—ஏன் கண்ணே தெய்வயானை! நாரதர்இங்குவந்தாரா ?

தே:—ஆம் பிராணநாதா !

சுப்:—சரிதான், சரிதான்.

ஆண்டிப்பண்டாரம் என்றமெட்டு.

நாரதர் கலகம் - இது - நமக்குத்தான் சிரமம் (நா)

பேரானபேர்களெல்லாம் பெருந்துயரில்ஆழ்ந்திருக்கப்
பேதைமதியாலேயல்லோ பெண்டிரண்டுகொண்டுவிட்டேன் (நா)
தாரணியில்புருஷர்பலர் சார்ந்திருப்பர்கலகமின்றி
தாரந்தானிரண்டுகொண்டால் தலையில்தாளம்போடுவாரே (நா)
ஆகாதிரண்டுதாரம் ஆய்ந்துபாஸ்கரகிருஷ்ணர்
அத்தனையுஞ்சொல்லிவைத்தார் அனுபவத்திற்கண்டபடி (நா)

[சண்முகக்கடவுள் இருவரையுஞ் சமாதானப்படுத்தி இடப்பாகம் வலப்பாகமாகக் கொண்டு, அங்குவந்த நாரதருக்குக் காட்சி தந்து நீடுமடியார்களுக்கு வரங்கொடுத்து வருகிறார்.]

மங்களம்.

சித்திவிநாயகர்க்குந் திருச்செந்தில்வேலனுக்கும்
தினமங்களம் வள்ளிமணமங்களம்
சத்திவேல்செந்தமிழ்க்குந் தாரணியிற்படிப்போர்க்கும்
ஜயமங்களம் ஈராறுபுயமங்களம்
எத்திசைபுகழவச் சிட்டகோபாலகிருஷ்ணன்
எழில்மங்களம் வாய்மைமொழிமங்களம்

திருவும் வாழிமா தேவரும் வாழிநற்
குருவும்வாழிகோபாலகிருஷ்ணன்வாழி
பெருகுஞ்செந்தமிழ்ப் பேருலகில்வாழி
அருளுஞ் சத்திவேல ருந்தமிழ் வாழியே

பார்ஸி வள்ளியம்மை சரித்திரம்.

முற்றிற்று-

அம்பாசமுத்திரம் வக்கீல் மகா-ா-ா-ஸ்ரீ

எச். டி. சுப்புசாமி அய்யரவர்களாலியற்றப்பெற்ற

ஸ்ரீராமாயணச்சிந்து.

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி லீலைக்கும்மியும் கூடியது.

மூவடியளந்தோன் சேவடிபோற்றும் பாவடியார்கள் பக்திக்கேற்பக் காவடிச்சிந்து வர்ணமெட்டுகளில் எழுதிய பாடல்கள். பக்திமான்களும் உத்தமமங்கையரும் பக்தியோடிதனை நித்தம் படித்தால் முத்தியும் பெறுவர். நினைத்த காரியம் சித்தியும் பெறுவர் என்பதில் ஐயமில்லை. விலை அணு 3.

---

## ஹிப்னடிஸம் மெஸ்மெரிஸம், என்று வழங்கும்

## வசிய சாஸ்திரம்.

நம் முன்னோர்களான மஹரிஷிகளால் அப்பியாசித்துச் சிறப்படையப் பெற்ற இப்புத்தகத்திற்கூறிய முறைகளைச்சரிவர அப்பியாசித்து வருவோர்க்கு தேவவசியம், மானிடவசியம், உலகவசியம், ஜனவசியம், தனவசியம், மிருகவசியம், இந்திரஜாலம், மஹேந்திரஜாலம், முதலிய வித்தைகள் விரைவில் சித்தியாகும். பேய் பிசாசுகளை இலகுவில் ஓட்டலாம். விஷம் முதலிய நோய்களை இலகுவாய் நீக்கலாம். "ஜலமேல் நடக்கலாம், தனல்மீதிருக்கலாம், தன்னிகரில் சித்தி பெறலாம் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை. சித்திரப் படங்களுடன் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

விலை ரூ. 1-8-0

### தேவதா சித்தி யென்னும்

### மலையாள மாந்திரீக ரத்னாகரம்,

புதிதாய் வெளிவந்த அற்புதமான நூல்.

ஏராளமான சக்கரங்களடங்கி யுள்ளது.

**மனைகள்தோறும் அவசியம் இருக்கத் தக்கது.**

இதில் தேவதாவசியம், உலகவசியம், வியாபார வசியம், தனவசியம், மெஸ்மெரிஷமென்னும் மனோவசியம், மிருகவசியம், பதினெண்வகை பூதகண பேதங்களென்னும்பேய் பிசாசுகளை ஆட்டுதல், அவைகளை ஓட்டுதல், பாம்பு தேள முதலிய விஷஜெந்துக்களின் விஷங்களை நீக்குதல், பாலகிரகதோஷ பரிகாரங்களுக்குள்ள மந்திரங்கள் முதலிய இன்னும் அநேகவித அருமையான மந்திரங்கள் தெளிவான சக்கரங்களுடன் அடங்கியிருக்கின்றன. (தற்புகழ்ச்சியன்று) புத்தகத்தை வாங்கிப் பார்ப்பவருக்கே உண்மை விளங்கும்.

முதற்காண்டம் 8 பாகங்களடங்கியது ரூ 1.

2-ம் காண்டம் 8 பாகங்களடங்கியது ரூ 1.

இரண்டு காண்டங்களும் ஒரே தடவையில் வாங்குவோருக்கு விலை ரூ 1-8-0.